உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ - தத்துவராயசுவாமிகளால்

அருளிச்செய்த,

# சிவசிவசங்கீர்த்தனம்.

# அடியவர்திறத்து நிந்தாஸ்துதி.

இவை

சமிவனக்ஷேத்திரமென்னுங் கோயிலூர்

ஸ்ரீ முத்துராமலிங்க சுவாமிகளின்

ஆதீனத்திற்குரிய

ஸ்ரீ - சிதம்பரசுவாமிகள்

மாணுக்கர்களிலொருவராகிய

அ - இராமசுவாமியவர்களால்

கோயிலூர் ஏட்டுப்பிரதிப்படி

பரிசோதித்து

ஆரணி - குப்புசெட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி.

சென்னை:

ஜீவரக்ஷாமிர்த அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சர்வசித்து ஆவணிமீ

சிவமயம்.

# சிவசிவசங்கீர்த்தனம்.

எண்சீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

அளவி றந்தது வருள்சிவ சிவசிவ
அகநி றைந்தது வடியிணை சிவசிவ
வுளமி றந்துயி ருணர்வொடு பரமற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
களவு துன்றிய கனகலெ னுளநிறை
கழல்கொ ளன்பது கணையிலை சிவசிவ
தெளிவி னன்குறு தெளிதரு மறுபவ
நிதிநி கழ்ந்தது சிவசிவ சிவசிவ. (௧)

உபநி டங்களு முவமையில் கலைகளு
மொருமை யிங்குற வறைதரு மொருபொரு
ளபய நன்குற வருளிட வுருவுகொ
டதுந டந்தது சிவசிவ சிவசிவ
வுபய வின்பமு முவகையு மொழிவற
வொளிரு கின்றது சிவசிவ சிவசிவ
நிபம தொன்றற நிகழனு பவநிதி
நிகரி றந்தது சிவசிவ சிவசிவ. (௨

வகையி றந்தது சிவசிவ சிவசிவ
மனமி றந்தது சிவசிவ சிவசிவ

ஆகமதொன்றிய வநுபவ திதியமிர்
தளவி றந்தது சிவசிவ சிவசிவ
தகுவ தன்றுள வடியவர் திரளொடு
சலனை வஞ்சனை யெனையுமொர் பொருளென
விகமெ ழுந்தரு ளிடலது கருணையி
னெலையி றந்தது சிவசிவ சிவசிவ.' (௩)

ஒளிரு நன்கழ றுதிசெய வரியா
லுபநி டங்களு மொருவிர கறிகில
துளப னன்குறு மயன்முத லிமையவர்
* தொடர்வு மஞ்சுவர் சிவசிவ சிவசிவ
யளிய தன்கழ லெளிதினி லளவறு
மதிச யங்கொடு துதிசெய வெனையருள்
வளநி னைந்தென நுளமுக விறைகழல்
வருசு தந்தர வலிசிவ சிவசிவ. (௪)

அளவை கொண்டுந விறைகழ லடைதர
வலம ருங்கல ருளவலி சிவசிவ
வளமில் வன்கலு மிவருள மதில்வசம்
வருதல் சங்கைய திலைசிவ சிவசிவ
வளர வன்பது விரகழி யடியவர்
மதியி லங்கிடு மிறைகழல் சிவசிவ
களவ நெஞ்சுடை யெனையுந லடிமைகொள்
கருணை யங்கடல் சிவசிவ சிவசிவ. (௫)

உருகு நெஞ்சுடன் மயிர்புள கிதம்வர
வுரைத சீர்ந்தழு துவகைசெ யடியவர்

---

* தொடரவுமென்பது - தொடர்வுமென இடைக்குறை
விகாரமாயிற்று.

பருகு மின்பம திறைகழல் சிவசிவ
பகலொ டிங்கிர வதுமிலை சிவசிவ
திருகு வன்புறு மெனதுள மிதுதிகழ்
திருவு ளஞ்செய்து செறிவிட மிதுவென
வருத லென்செய்த படிசிவ சிவசிவ
வளமை யென்புகல் வதுசிவ சிவசிவ (௬)

நடலை கொண்டிர வொடுபக லறமிக
நடுந டுங்கிடு மெனதுள மதுதனை
முடலை வன்பிணை வுடலழி பொருளுயிர்
முழுதை யுங்கொடு சிவசிவ சிவசிவ
கடலை யின்பந லமிர்தினை யெனதுறு
கரத லந்திகழ் மணியென வருளிய
படியி தென்செய்த படிசிவ சிவசிவ
பரம பண்டித னருள்சிவ சிவசிவ. (௭)

ஒருக ணந்துய ரறும்வகை யதுவற
வுகளும் வன்பவ வுததியின் மடிதரு
மிருக ணின்றிய வுறுசெவி டொையுமி
விழிசெய் வன்பிணை வெனையுமொர் பொருளென
வருத ருந்திரு வருள்சிவ சிவசிவ
வடிவு கொண்டவ லபமிது சிவசிவ
* வருள்க ணன்றியொர் பொருளிலை சிவசிவ
வமல னென்செய்த படிசிவ சிவசிவ. (அ)

உளம தொன்றிய வொருநிதி சிவசிவ
வுடனி கழ்ந்திடு மொளியது சிவசிவ

---

* அருள்கண் வினைத்தொகை.

வளவி றந்தந லமிர்தது சிவசிவ
வகில மின்றிய வருள்சிவ சிவசிவ
வளம்வி ளம்பிட விரகிலை சிவசிவ
வணம தோன்றிடும் வகையிலை சிவசிவ
வெளிதி கழ்ந்தில கியதுதி சிவசிவ
விகிர்த னென்செய்த படிசிவ சிவசிவ. (௯)

கருணை யம்புய முகமலர் சிவசிவ
கருணை யங்கட லிருவிழி சிவசிவ
வருணை யந்திடு மடியிணை சிவசிவ
வழகு துன்றிய வடிவது சிவசிவ
விருணை யந்திடு மிடருறு பிறவியை
யெறியு மெந்தைதன் மறமது சிவசிவ
திருதிடன்றன தருள்சிவ சிவசிவ
சிவநி கழ்ந்தது சிவசிவ சிவசிவ. (௧௦)

சிவசிவசங்கீர்த்தன முற்றுப்பெற்றது.

---

# அடியவர்திறத்து நிந்தாஸ்துதி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

காயமா ளிகையதுண்டு மூவர்கா தலிக ளுண்டு
வாயல்காப் பறிவுமுண்டு வளம்படு சமதமாதி
யாயநற் சுற்ற முண்டங் கடக்கரும் பொருளுமுண்டு
தூயநற் சுருபா னந்தன் றொண்டர்க டிறந்ததென்னே. (௧)

அன்பர்பா லார்வமுண்டங் கரும்பவச் செற்றமுண்டு
வன்பதார் விஷயந்தன்மேன் மாறிடாக் குரோதமுண்டு
முன்புறப் பக்கமேல்கீழ் முழுதுமா நிதியுமுண்டு
துன்பமில் சுரூபானந்தன் றொண்டர்க டுறந்ததென்னே. (௨)

ஒன்றொடுங் கலந்திராத வுறவின்மை பெரிதுமுண்டு
பொன்றினு மசைவுறாத முரண்வலி புகலினுண்டு
கன்றிடும் வயிரியோடுங் கலக்கமி லன்புண்டென்றாற்
றூன்றருட் சுரூபானந்தன் றொண்டர்க டுறந்ததென்னே. (௩)

கல்லுறு சிந்தையெல்லாங் களைக்கும்வல் லபமுமுண்டு
வல்லவர்க் கொருகாலத்து மிரங்கிடாமறமுமுண்டங்
கெல்லையற் றிடுமிரக்க மிறையொடு மிகவுண்டென்றாற்
றொல்லைநற் சிவப்பிரகாசன் றொண்டர்க டுறந்ததென்னே. (௪)

முன்பினு மலைவுதீர மொழிதரு விரகதுண்டு
நன்கொடு தீங்குகாணா ஞானமாஞ் செருக்குமுண்டு
வன்புறு துன்பம்வந்தான் மயக்கமில் களிப்பதுண்டு
துன்பமில் சுரூபானந்தன் றொண்டர்க டுறந்ததென்னே. (௫)

கோத்தலைவ குலைத்துமேலாங் குணமின்மை பெரிதுமுண்டு
பார்த்தவ ருயிர்கண்ணாலே வாங்குபண் பின்மையுண்டங்
கேத்துறு மேழைகட்கே யெளிவரு மியல்புண்டென்றா
லாத்தனன் சுரூபானந்த னன்பர்க டுறந்ததென்னே. (௬)

உலகியல் புறாவுணர்ந்த வுன்மத்த மிகவுமுண்டு
தலைவன தருளதன்றித் தணிப்பரும் பித்துமுண்டு
மலைவுறு பகுதிபோர்த்து வாதனை மாண்டதுண்டு
நிலையுடைச் சுரூபானந்த னேசர்க டுறந்ததென்னே. (௭)

தள்ளினு மிறைவனன்பர் தமைவிடாப் பாசமுண்டு
நள்ளினு மிதரர்தம்மை நணுகிடாத் துவேஷமுண்டு
துள்ளும்வன் னெஞ்சவஞ்சர்க் கருளிடாச் சோரமுண்டாற்
றெள்ளுநற் சுரூபாநந்தன் சித்தர்க டுறந்ததென்னே. (அ)

* ஏத்தினர்க் கருத்தேசெய்தங் கெளிவரு மிச்சையுண்டு
தோத்திரச் சூழலுற்றுச் சுழலும்வன் பற்றுமுண்டு
சாத்திரப் பேய்களுக்குச் சலனஞ்செய் தவறுண்டென்றாற்
நித்தனற் சுரூபானந்தன் சித்தர்க டுறந்ததென்னே. (௯)

களையில்பே ரின்பத்தாராக் காமுகர் விஷயகோப
ருளையறு பொருடம்முள்ளே யொளித்துப்பே ணிடுமுலோபர்
முரிவில்பே ரின்பத்தீசன் வயமுயிர் காணுமோகர்
நிலையுமெம் மதமுந்தாமா நிமலர்க டுறந்ததென்னே. (௧௦)

வரும்பவத் திருச்சீற்ற மாற்சரியத்தர் தன்னைத்
தருங்குரு பரன்றாளன்றித் தாழ்ந்திடாத் தெம்பர்தீரா
வரும்பவ நாசனெங்கட் குண்டெனு மகங்காரத்தர்
பரம்புமா யாபைசுன்ய பண்பினர் துறந்ததென்னே. (௧௧)

திலவருட் பொறையர்நேதி நேதியே நிரூபகத்தாற்
குலவுறு நற்சந்தோஷர் குருபரன் முழுதுமென்னச்
சொலிதையுற் றிடும்விவேகர் தோய்வெதி ரிக்தசாந்தர்
தொலைவில்சித் தவிரோதத்தர் தூயவர் துறந்ததென்னே, (௧௨)

உற்றவா ரோபிதங்க ளொழிந்தவா றுதருமாமான்
முற்றுமாய் மொழியிறந்து முடிந்தமோ னத்தராமாற்
பற்றுவீ டின்றிநின்ற பராமிர்தா னந்தர்தாமாற்
றுற்றசீர்ச் சுரூபானந்தன் றொண்டர்க டுறந்ததென்னே. (௧௩)

---

* ஏத்தினர்க்கருத்தேன விசைநோக்கிமிருந்தது.

சுட்டிய வெவையுந்தாமாய்த் துறக்கவே றென்றின்றுனல்
விட்டதும் விடாதுமன்றி வேதமோர்நான்கும் பேணப்
பட்டிடு மளவுமல்லாப் பரம்பரன் சுரூபானந்தன்
சிட்டர்க டறந்தாரென்னும் வார்த்தையுஞ் சிறப்பதன்றே. (கசு)

அடியவர்திறத்து நிந்தாஸ்துதி முற்றிற்று.

---

இஃது அஷ்ட்டாவர்க்கிரர்கீதைத் தொடர்பு.

இந்தப்படி சகல உபநிஷத்துக்களிலேயும் பிரதிபாதிக்கப்பட்ட ரகசியமான ஆத்மவித்தையை அஷ்ட்டாவர்க்கிரரிஷியால் பாற்கவ ரிஷிகேட்டுச் சமுசயந்தீர்ந்து ஆத்மசுகத்தை அடைந்தார் ஆனபடியா லிக்காலத்தில் ஆத்மவித்தையை அடைய விருப்பமுடைய அனேவோரு மிக்கிரந்தத்தி லதிகவிருப்பம்வைத் தனுட்டிக்கி லடையத்தக்க பிரயோஜனத்தை அடையலாம் இது சித்தம் அனேகருடைய வேண்டுகோளின் நிமித்தங்கிடைத்த பிரதிகளைக்கொண்டு ஒருவாராராய்ந்து அச்சிடப்பட்டது ஆனபடியாலிதில் சொற்சோர்வு பொருட்சோர்வுமுதலிய குற்றமிருக்குமே லிக்கிரந்தம் பார்வைசெய்யும் அரியகுணகண அலங்கிருதாதிகளையே சோபையாகவுடைய சாதுக்கள் மன்னிக்கவேண்டியது.

# பரிசோதனப்பத்திரம்.

| பக்கம். | சுலோகம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௭ | ௧ | கிர | கிற |
| ,, | ௧௧ | ,, | மாங்கர | மாங்கார |
| ௫ | ௧௪ | ௨ | பாசதை | பாசத்தை |
| ,, | ௧ | ௧ | சாக | சாகா |
| ௭ | ௧௪ | ௨ | யிருங்கின்ற | யிருக்கின்ற |
| ,, | ௧௮ | ,, | பார்ச்க்கசே | பார்க்கச்சே |
| ௮ | ௨௩ | ௧ | சொற்க | சுவர்க்க |
| ௯ | ௨ | ௨ | சலா | சிலா |
| ௧0 | ௧௩ | ௧ | இருக | இருக் |
| ,, | ௧ | ௨ | கொணி | கொண் |
| ௧௩ | ௪ | ௨ | யிம்லா | யில்லா |
| | ௯ - [illegible]தில் | | | |
| ௧௪ | ௪ | ௩ | இமில்லா | இல்லா |
| ௧௫ | ௭ | ௧ | கற்ப்பி ... | கற்பி |
| ௧௬ | ௧ | ,, | வஸ்த்து ... | வஸ்து |
| ,, | ௩ | ௨ | யிருங்கின் | யிருக்கின் |
| ௨0 | ௧ | ,, | ஜீவபரீ | ஜீவபரி |
| ,, | ௬ | ௨ | விட்டு ... | விட்டுச் |
| ௨௧ | ௧௩ | ,, | சொர்ன | சுவர்ண |
| ௨௨ | ௧௭ | ௩ | கிறுத்தி | கிருத்தி |
| ௨௩ | ௯ | ௨ | அவேன | அவனே |
| ௨௪ | ௪ | ௧ | போகங்கங் | போகங் |
| ௨௫ | ௧௩ | ௨ | ஸ்த்திரீ | ஸ்திரீ |
| ௨௭ | ௪ | ,, | மெப்பேதும் | மெப்போதும் |
| ,, | ,, | ௩ | அைந்டத | அடைந்த |
| ௨௯ | ௧௯ | ௧ | விடுபட்ப்டு | விடுபட்டுப் |
| ,, | ௨௪ | ௨ | கி[illegible]த்தி | கிருத்தி |

# பரிசோதனப்பத்திரம்.

| பக்கம். | சுலோகம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ,, | உரு | உ | நீனை | நினை |
| ௩௦ | ௩உ | உ | பிற | பிர |
| ௩க | ௪௦ | ௩ | முக்தி | முக்திச் |
| ௩உ | ௪உ | ௪ | தர் | தற் |
| ௩எ | அ௪ | க | பிச்கைக்கார | பிச்சைக்கார |
| ௩அ | கூஉ | உ | சாசாகின்ற | சாகின்ற |
| ,, | | அ | சுலேகம் | சுலோகம் |

விளம்பரத்தில் - கரு - பார் - பாற்
புஸ்தகஅந்தத்தில்- கரு - வாரா - வாரு

## பாடபேதம்.

அஷ்ட்டா ... ... அஷ்ட
பெந்தம் ... ... பந்தம்
யோகீஸ்பரன் ... ... யோகீஸ்வரன்
முனிஸ்பரன் ... ... முனீஸ்வரன்
சன்னியாசம் ... ... சந்நியாசம்
பாற்கவன் ... ... பார்க்கவன்
செகத்து } ... ... ஜகத்து
சகத்து }

இவ்வண்ணம்இன்னுஞ்சிலபாடபேதத்தாற் சொற்பேதங்களுள.